[20th August 1960

மெட்டல் ரோடு போட்டு, ப்ளாக்டாப் போடுவதற்கு வசதியாக இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டது. இதுபற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறோம். இப்போதுள்ள நிலைமையில் வேலையை எடுத்துக்கொண்டு பிறகு வேண்டுமானாலும் அங்கீகாரம் பெறலாம் என்று இருக்கிறது.

**SRI A. VEDARATHNAM:** நான்கு லட்சத்திற்கு போடப்பட்ட திட்டமானது இப்பொழுது ஏழு லட்சமாக உயர்ந்தது. திட்டம் போட்ட காலத்திலே அதை எடுத்துக்கொண்டு அதிக காலதாமதம் செய்யாமல் அப்போதே அந்த வேலையைப் பூர்த்தி செய்திருந்தால் இத்தகைய கஷ்டம் நேர்ந்திராது அல்லவா?

**THE HON. SRI P. KAKKAN:** நான்கு லட்சம் ரூபாயில் திட்டத்தை ஆரம்பித்திருந்தால் வேலையே நடந்திருக்காது. எப்படியும் ரோடு போடுவதுதான் போடுகிறோம், நல்லமுறையில் போடவேண்டும் என்பதற்காகவே காலதாமதம் செய்யப்பட்டது.

*Jeeps for Assistant Engineers*

* 329 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. R. VISWANATHAN): Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there was any proposal for supply of jeeps to each of the Assistant Engineers (Public Health) employed under the Rural Water-supply Comprehensive Programme and the Local Development Works Programme; and

(*b*) if so, why it was not given effect to?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Yes, Sir.

(*b*) The proposal was deferred for want of funds.

**SRI S. M. ANNAMALAI:** இப்படிக் கிணறுகள் வெட்ட டெக்னிகல் அசிஸ்டெண்டு வேண்டுமென்று கோரினால் அவர்கள் வந்து பார்ப்பதற்கே காலதாமதமாகிறது. அவர்களுக்கு ஜீப் இருந்தால் வேலை துரிதமாக நடைபெறும். அந்தக் காரணத்தை யொட்டியாவது அப்படிப்பட்டவர்களுக்கு ஜீப் வழங்க முன் வருவார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** எல்லோரும் ஜீப் வேண்டும் என்கிறார்கள். முக்கியமானவற்றிற்கு எல்லாம் கொடுத்து வருகிறோம். காலக்கிரமத்தில் இவர்களுக்கும் கொடுக்க ஏற்பாடு செய்கிறோம்.

*Foul smell from tanneries*

*** 330 *Q.*—SRI S. M. ANNAMALAI:** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடிக்கு அருகாமையிலுள்ள வளையாம்பட்டு, கிரிசமுத்திரம் கிராமங்களுக்கருகில் தோல் கழுவுநீரில் துர்நாற்றத்தால் சுகாதாரம் பாதிக்கப்படுவதைத் தடுக்க அரசாங்கத்தார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாவை?

20th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : An experimental study is being conducted at Vaniyambadi to evolve a suitable method for the proper and satisfactory disposal of tannery effluents. As soon as a suitable method is evolved, all the tanneries will be required to adopt it.

SRI S. M. ANNAMALAI : அந்த கிராமங்களில் உள்ளவர்கள் குடிப்பதற்கே தண்ணீர் இல்லாமல் தவிக்கிறார்கள். கிணறுகள் தோண்டினாலும் கூட அதில் இருந்து வருகிற ஊற்று நீர் துர் நாற்றம் அடிக்கிறது. நான்கைந்து ஆண்டுகளாக இதுபற்றி சர்க்காருக்குப் பல மகஜர்கள் எழுதியும் கூடச் சர்க்கார் பேசாமல் இருந்துக்கொண்டிருக்கிறார்கள். உடனடியாக அந்தப் பிரதேசத்தில் சுகாதாரவசதி பாதிக்கப்படாமல் இருப்பதற்கும், குடிநீரின் நாற்றத்தைப் போக்குவதற்கும் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதற்கு ஏற்பாடு செய்து வருகிறோம். இந்த பரிட்சார்த்தம் முடிவதற்கு முன்னே கூட அந்தமாதிரியான நீரை வெளியே மைதானத்தில் டாங்கு மாதிரி கட்டி நீராவியாக்குவதற்கு ஏற்பாடு செய்கிறோம்.

*Solar energy*

* 331 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விறகுக்குப் பதிலாக சூரிய வெப்ப மூலமாகக் கிடைக்கப்படும் உஷ்ணத்தை உபயோகிப்பதற்காக யந்திரங்களைத் தயாரிக்க திட்டம் அரசாங்கத்தின் பரிசிலனையில் இருக்கிறதா ?

(ஆ) அப்படியானால், விவரங்கள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(ஆ) Dose not arise.

SRI P. G. MANICKAM : சூரியனின் மூலமாகக் கிடைக்கும் வெப்பத்தைக்கொண்டு, வெளிநாடுகளில் பல்வேறு காரியங்கள் செய்யப்பட்டு வருவதாகத் தெரிகிறது. அதேமாதிரி நம் ராஜ்யத்திலும் நடத்துவதற்கு ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது இல்லையென்று சொன்னேன். இதைப் பரிசிலனை செய்யவேண்டுமென்றால் டெக்னிகல் நாலட்ஜ் வேண்டும். இப்போது அதற்கு வசதிகள் இல்லை.

*Express Bus Service*

* 332 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI N. K. PALANISAMI) : Will the Hon. the Minister for Industries be pleased to state whether express buses have been introduced from Madras to Tiruchirappalli and Salem?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

SRI T. S. RAMASWAMI : May I know, Sir, whether the Hon. Minister would be pleased to state the return they get in running the express buses on these routes?